**Sri R. SRINIVASA IYER :** ஜமீன், இனும் கிராமங்களில் எடுக்கப்பட்ட குளங்கள் எத்தனை? ஸ்டாண்டர்டுக்கு ரிப்பேர் எவ்வளவு செய்யப்பட்டிருக்கிறது? வருஷத்திற்கு எவ்வளவு குளங்கள் வீதம் ரிப்பேருக்கு எடுக்க உத்தேசம்? இதிலே சில ரெவின்யூ டிபார்ட்மெண்டிலேயும், சில பப்ளிக் ஒர்க்ஸ் டிபார்ட்மென்டிலேயும், இருக்கின்றன. எல்லாவற்றையுமே புட் ப்ரோடக்ஷன் டிபார்ட்மெண்டிலே கொண்டு வந்து, இந்த ஏரிகளை மராமத்து செய்ய உத்தேசம் உண்டா?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : ஸ்பெஷல் மைனர் இர்ரிகேஷன் திட்டம் என்ற வகையிலே, இரண்டாவது திட்டத்தில், 4 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டு, செலவழிக்கப்பட்ட இந்த மூன்றுவது திட்டத்திலே, 8 கோடி ரூபாய் ஒதுக்கப் பட்டிருக்கிறது. ஆகவே, இந்த மூன்றுவது திட்டத்திலே இரட்டிப்பாக வேலை நடைபெறும். இதிலே 10 ஏக்கருக்கு மேற் பட்ட ஆயக்கட்டுக்களைச் சேர்த்து, மொத்தமாக ஏரிகள் மரா மத்து கவனிக்கப்படுகிறது. அதிலே, 8,331 ஏரிகள் இருக்கின்றன. அது தமிழ் நாடு முழுவதும் அல்ல. சிறிய நிர்ப்பாசனங்களை மட்டும் கவனிப்பது என்பது அரசாங்கத்தின் முடிவு. இதிலும் சிற்சில பிராந்தியங்களில் விசேஷக் கவனம் செலுத்தப்படுகிறது. உதாரணமாக, ராமநாதபுரம் ஜில்லாவில் ஜமீன் பிராந்தியங்களில் உள்ள குளங்கள், ஏரிகள், தஞ்சாவூர் ஜில்லாவில் அரந்தாங்கி தாலுகாவில் உள்ளது—இது பழையது—புதுக் கோட்டை எஸ்டேட்டிலுள்ளது, இங்கெல்லாம் 10 ஏக்கருக்கு கீழ்பட்டதாக இருப்பவைகளைக் கணக்கெடுத்துப் பார்த்தால், 8,331 இர்ரிகேஷன் ஸோர்ஸ்கள் ஆகின்றன. இவற்றைச் சரிசெய்ய ஒதுக்கியுள்ள தொகை 4,07,00,000 ரூபாய்.

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : I understand that the Food Production Department is spending more than a crore of rupees whereas a few years before they were spending only Rs. 30 lakhs to Rs. 40 lakhs. Even though there has been considerable increase in expenditure in the food production department, they have been asking for some additional staff and that request has not been acceded to; consequently the work has slowed down to a very great extent. Is it a fact and will the Government look into it?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : I may tell the hon. Member that the request for additional staff is now and then being looked into and responded.

**Sri R. SRINIVASA IYER :** இப்பொழுது பட்டுக்கோட்டை தாலுகாவிலுள்ள ஸி.எம்.பி. கஜல் பாயாத பிராந்தி யங்களில், இன்றைக்குள்ள எஸ்.எம்.ஐ.பி.-யையும் சேர்த்து பத்து ஏக்கருக்கு மேல் என்று அமைச்சர் சொன்னார்கள். ஏற்கனவே 200 ஏக்கர் பப்ளிக் ஒர்க்ஸ் மராமத்தில் இருக்கிறது. இந்த எட்டாயிரம் சொச்சம் ஏரிகளில் அந்த 200 ஏக்கருக்கு மேற் பட்ட குளங்களும் உட்பட்டவைகளா?

18th September 1961]

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** இதில் பப்ளிக் ஒர்க்ஸ் டிபார்ட்மெண்டின் கீழ் உள்ள 200 ஏக்கருக்கு மேற்பட்டவை என்பது சேர்க்கப்படவில்லை. நான் குறிப்பிட்டது, சில பிராந்தியங்களிலே அதிகக் கவனம் செலுத்தப்படுகிறது என்பதைப் பற்றி. பட்டுக்கோட்டையில், சாதாரணமுறையில் புட் ப்ரொடக்ஷன் டிபார்ட்மெண்டில் செய்கிறார்கள்.

**SRI V. K. KOTHANDARAMAN :** ஸார், 1961-62-ம் ஆண்டிலே, வட ஆர்க்காடு ஜில்லாவிலே உள்ள ஏரிகளை ஆழப் படுத்த, இயந்திரங்களை உபயோகித்து மாராமத்துச் செய்யப்படும் என்று பட்ஜெட் ரிப்போர்ட்டில் சொல்லப்பட்டது. மாதம் ஆறு ஆச்சு, ஆனால், மராமத்து வேலை இன்னும் ஆரம்பிக்கப்படவில்லை அந்த வேலை இந்த ஆண்டுக்குள்ளாவது செய்யப்படுமா அல்லது அடுத்த ஆண்டுக்காவது மாற்றப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** அதைப்பற்றித் தனிக் கேள்வி போட்டால், பதிலளிக்கிறேன்.

**SRI R. KRISHNASAMY NAIDU :** சிறிய ஏரிகளை மராமத்து செய்து நிர்வாகம் செய்வது பஞ்சாயத்து யூனியன்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஒரு ஏக்கருக்கு வருஷத்திற்கு ரூ. 2--8--0 மராமத்துச் செலவு என்று மானியம் கொடுப்பது இப்பொழுது இருக்கும் ஏற்பாடு. கடந்த கால அனுபவத்தை வைத்துப் பார்த்தால், இந்தத் தொகை மிக மிகக் குறைவு என்பது தெரிந்திருக்கிறது. ஆகவே, அந்தப் பழைய கால அனுபவத்தை ஒட்டி ஒதுக்கப்படும் தொகையை அதிகப்படுத்த சர்க்காருக்கு உத்தேசம் உண்டா?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** மராமத்து என்பது இரண்டு விதம். ஒன்று ஏரி, குளங்களை சரிப்படுத்துவது. மற்றொன்று, அவற்றை மெயின்டெயின் பண்ணுவது. மெயின்டினன்ஸுக்கு பஞ்சாயத்துக்களுக்கு குறைந்த அளவில் ஒதுக்கப் படுகிறது.

**SRI M. P. SUBRAMANIAM :** ஏரிகள் தூர்வாருவதால், செங்கல்பட்டு ஜில்லாவில், ஒரு தனித் திட்டத்தின் கீழ், புல்டோசர்களை வைத்து, செலவு குறையலாம் என்று பரீட்சார்த்தமாக செய்யப்பட்டதே, அதைப்பற்றி அரசாங்கத்தின் கருத்து என்ன. அந்த திட்டத்தை மற்ற மாவட்டங்களிலும் செயல்படுத்த உத்தேசம் உண்டா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** அது "டி ஸில்டிங்-கம்-ரிக்ளமேஷன் ஆப் டாங்ஸ்" என்ற திட்டம். சில இயந்திரங்களை வைத்துக்கொண்டு ஏரிகளில் மண்ணை வாரி எடுத்து, அப்புறப் படுத்தி, ஆழப்படுத்துவது. அந்தத் திட்டம் செங்கல்பட்டில் மட்டுமல்லாமல் வேறு சிற்சில இடங்களிலும் பரீட்சார்த்தமாக நிறைவேற்றப்பட்டுவருகிறது. அதில் திருப்திதான் ஏற்பட்டிருக்கிறது. அதை விஸ்தரிக்க வேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் உத்தேசம்.

SRI T. T. DANIEL : May I know the total amount allotted for de-silting of all tanks? Will it be possible to de-silt all tanks before the end of the Third Plan? Will the Government give top priority to make necessary repairs to the bunds of all tanks which lie adjacent to railway lines so that when there are floods, the water from such tanks may not flow across the rails and wash off the rails?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : It is not practicable to de-silt all the tanks. Even in Kanyakumari district, a few tanks have been taken up under this scheme.

SRI V. ARUNACHALA THEVAR : கடந்த புயலில் பாதிக்கப் பட்ட Ex புதுக்கோட்டை ஸ்டேட் பிராந்தியத்திலுள்ள மேஜர் இனாம் andமைனர் இனாம் குளங்களெல்லாம் ரிப்பேர் செய்யப்படாமல் சீர்கெட்டிருக்கிறதே அவைகளை எல்லாம் சீர்செய்ய அவைகள் எந்தத் திட்டங்களில் சேர்க்கப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பழுது பார்க்கக் கூடிய எல்லா குளங்களெல்லாம் தான் பழுது பார்க்கப்படுகிறது. அப்படி பழுது பார்த்தால் எந்த வகையில் பலன் ஏற்படும் என்பதை பரிசீலனை செய்து அதன் மூலம் ஏதாவது வகையில் பலன் ஏற்படுகிறதா என்று தோன்றினால் அதன்மீது நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படுகின்றன. அந்த வகையில்தான் எல்லா குளங்களும் எடுத்துக்கொள்ளப்படுகின்றன. மற்றவைகளை மராமத்து செய்வதற்கு எடுத்துக்கொள்வதில்லை.

SRI S. RAMASWAMI NAIDU ; குளங்களை மராமத்து செய்ய வேண்டும் என்று மனுப்போட்டு அதன் மீது நடவடிக்கை எடுத்துக்கொள்வது என்று இல்லாமல் சர்க்காரே பழுது பார்க்கக் கூடிய எல்லா குளங்களையும் தாங்களாகவே பழுது பார்க்க எடுத்துக்கொண்டு பழுது பார்க்க நடவடிக்கை எடுத்துக் கொள்வார்களா ? அந்த வகையில் ஏதாவது திட்டம் இருக்கிறதா ? அந்தத் திட்டத்தின் கீழ் எல்லா குளங்களையுமே பழுது பார்க்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவ்வாறுதான் அந்த இலாகா கவனம் செலுத்திக்கொண்டு வருகிறது. மனு வந்துதான் செய்யவேண்டும் என்று இல்லை. அந்த இலாகா இஞ்சினியர் அவர்களே அவைகளைப்பற்றி ஆராய்ந்து வேண்டிய நடவடிக்கையும் எடுத்துக்கொண்டு வருகிறார்.

SRI S. NAGARAJA MONIGAR : பழைய ஏரிகளையும் குளங்களையும் துரஸ்து செய்யும் வேலைகள் இப்பொழுது இராமநாதபுரம், புதுக்கோட்டை இன்னும் வேறு சில இடங்களில் செய்வதற்கு கவனம் செலுத்தப்பட்டு வருகிறது என்று சற்று முன்பு கனம் அமைச்சர் சொன்னார். எங்கெங்கே அப்படி பழுது பார்க்க வேண்டிய வேலைகள் இருக்கின்றனவோ அங்கேயெல்லாம்

18th September 1961]

இந்த வேலைகளைச் செய்ய முன் வருவார்களா? சில இடங்களில் அந்த வேலைகள் நடைபெறவில்லை என்று தெரியவருகிறது. அந்த இடங்களிலெல்லாம் அப்படிப்பட்ட வேலைகள் நடைபெறுவதற்கு ஏதாவது திட்டம் இருக்கிறதா? அப்படிப்பட்ட திட்டம் இருந்தால் அது நடைமுறையில் இருக்கிறதா?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** அவைகளில்தான் விசேஷ கவனம் செலுத்தப்பட்டு வருகிறது என்று சொன்னேன். மனு வரவேண்டிய அவசியம் இல்லை என்றும் குறிப்பிட்டேன். எந்த இடங்களில் கான்சென்ட்ரேட் செய்யவேண்டுமோ அந்தந்த இடங்களில் கான்சென்ட்ரேட் செய்யப்பட்டு வருகிறது என்றும் சொன்னேன். சேலம் மாவட்டம், இன்னும் மற்ற இடங்களிலும் புட் ப்ரொட்க்ஷன் இலாகா அவற்றில் தீவிர கவனம் செலுத்திக் கொண்டுதான் வருகிறது. பல இடங்களில் குளங்களை அவர்களே சீர்படுத்திக்கொண்டு வருகிறார்கள்.

*Kulumur Odai Irrigation Scheme*

* 1570 *Q*.—SRI A. A. RASHEED (on behalf of SRI K. R. VISWANATHAN) : Will the Hon. the Minister for Home be pleased to state the present stage of the Kulumur Odai Irrigation Scheme?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Government await the report of the Board of Revenue (Food Production) on the revenue, financial, food production and administrative aspects of the scheme.

**SRI S. RAMALINGA PADAYACHI :** குழுமூர் ஓடைபாசன திட்டம் சுமார் 7, 8, 10 ஆண்டுகளுக்கு முன்னதாகவிருந்தே சீர்படுத்தப்படாமல் இருக்கிறது. முன்பு ஒரு தடவை இதைப்பற்றி திட்டம் கொண்டு வந்து அதற்கு என்று 75 ஆயிரம் ரூபாய் சாங்க்ஷன் செய்யப்பட்டிருந்தது. அதன் பிறகு அதை டெண்டருக்கு விடப்பட்டு ஒருவரும் கண்டிராக்ட் எடுக்க வராததால் அதற்கு தென்னார்காட்டிலிருந்து ரிவைஸ் எஸ்டிமேட் போட்டதில் ஏதோ ஆட்சேபணை வந்ததால் அது நின்றுபோய் விடக்கூடாது. சாங்க்ஷன் ஆனபிறகு ஆட்சேபணை வந்ததால் அது நின்றுபோக வேண்டிய காரணம் என்ன? அதற்கு கலெக்டர் என்ன சொல்லுகிறார்? கலெக்டர் என்ன சொன்னார் என்பதைப்பற்றி கனம் அமைச்சர் விளக்குவாரா?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** கனம் அங்கத்தினர் சொன்னதுபோல் ஆட்சேபணை வந்திருக்கிறது. அதைப்பற்றி பரிசீலனை செய்ய வேண்டியதாக இருக்கிறது. அதனால்தான் தாமதம் ஏற்படுகிறது. எந்த இடத்திலிருந்து ஆட்சேபணை வந்தாலும் அதைப்பற்றி பரிசீலிக்க வேண்டியதாக இருக்கிறது. அது முடிவான பிறகுதான் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது.